[**துகளறுபோதம்** மதுரைச் சிவப்பிரகாசர் திராவிடமாபாடிய காரர் முதலிய சித்தாந்த சாத்திர வுரையாசிரியர்களால் எடுத்தாளப் பட்ட அரிய நூல். மெய்கண்ட சாத்திரம் பதினன்கெனக் கணக்குக் காட்டும் 'உந்திகளிறு' என்னும் வெண்பாவுக்கு மாருக என்னிடத்தி லுள்ள மெய்கண்ட சாத்திர ஓலைச் சுவடியிலும், திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் நன்முயற்சியாற் கிடைத்த ஓலைச் சுவடியிலும் **உண்மைநெறி விளக்கம்** காணப்படாது **துகளறுபோதம்** காணப்படு கிறது. அதனல் மெய்கண்ட சாத்திரப் பதிப்பில் அதனைச் சேர்த்தல் ஒழுங்காம்.

**துகளறுபோத** மருளிச் செய்தவர் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். உமாபதிசிவாசாரியர் சீடர் அருணமச்சிவாயர் என்றும், அவர் சீடர் காழிக் கங்கை மெய்கண்டார் என்றும், அவர் சீடர் சிற்றம்பல நாடிகள் என்றும் உரைப்பர். இவர் **தத்துவப்பிரகாச** ஆசிரியர் தத்துவப் பிர காசர், காஞ்சி ஞானப்பிரகாசர் முதலிய அறுபத்துமூவர் சீடரை யுடையரா யிருந்து மாயூரத்தை யடுத்த சித்தர்வனத்திலே சமாதி யாயினர். இவரையன்றிக் காழிக் கங்கை மெய்கண்டார் சீடர் காழிப் பெரும்பழுதைகட்டி சிற்றம்பலவர் மதுரையிலிருந்தனர் என்றும், காழிச் சிறுபழுதைகட்டி சிற்றம்பலவர் திருச்செந்தூரிலிருந்தனர் என்றும் உரைப்பர். முதலவர் சீடர் சீகாளத்தியிலிருந்த பழுதை கட்டி ஞானப்பிரகாசர் என்றும், அவர் சீடர் தருமையாதீனத்து ஸ்தாபகராகிய ஞானசம்பந்த தேசிகர்க்குக் குருவாகிய கமலை ஞானப் பிரகாசரென்றும் கூறுவர். பின்னவர் **திருச்செந்தூரகவல்** பாடியவர் என்பர். சீகாழிச் சிற்றம்பலநாடிகள் காலம் கி. பி. பதினன்காம் நூற்றாண்டாகும். இவ் விவரங்கள் சீகாழி வித்துவச் சிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள் எனக்குத் தந்தவை. **திருச்செந்தூரகவலில்** சிற்றம்பலவர் தமக்கு முருகப்பிரானே குரு வாக வந்து உபதேசித்தாரென் றுரைத்தமை இங்குக் குறிக்கத்தக்கது. **துகளறுபோதம்** திருநெல்வேலி பால்வண்ண முதலியாரவர்களாலும், நாகபட்டினம் வேதாசலம் பிள்ளையவர்களாலும் [1898], திருமயிலை சண்முகம் பிள்ளையவர்களாலும் [1904] முன்னமே வெளியிடப்பட் டுள்ளது. ஆயினும் பிரதிகள் கிடைப்பது அருமை. இப் பதிப்பிற்கு ஆதாரமாயிருந்த பிரதிகள் என்னிடத்திலுள்ள இரண்டு ஓலைச் சுவடி களிலும், திரு. வையாபுரிப் பிள்ளை யவர்கள் நன்முயற்சியாற் கிடை த்த ஓலைச்சுவடியிலும், இராசாங்கக் கையெழுத்து நூல் நிலயத்துள்ள ஓலைச் சுவடியிலும் உள்ளவை. அச்சிலுள்ள பிரதிகளும் உபகாரப் பட்டன.

—S. அனவரதவிநாயகம் பிள்ளை.]

உ

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

